"நடைமுறைக் கேற்ற கொள்கை என்பதற்கும் முடிவான சித்தாந்தம் என்பதற்கும் உள்ள வேறுபாட்டை நாம் கொஞ்சம் உணர வேண்டும். நடைமுறைக் கேற்ற கொள்கையை மாற்றிக் கொள்ளலாம்; முடிவான சித்தாந்தத்தை மாற்றிக் கொள்ளமுடியாது. எனினும் பின் பற்றுகிற காலங்களில் ஒன்றைப் போலவே மற்றொன்றும் வலுவுடையதாகும்."

—: காந்திஜீ :—

"என்னைப் பாதுகாக்க கடவுள் ஒருவர் இருக்கிறார் என்ற அவநிச்சயம் எனக்கு எப்போதுமே ஏற்பட்டதில்லை. கடவுளைப் பற்றிய இந்த நினைவுமின்றி அமைதியாகவும், உண்மையாகவும் எனது திட்டப்படி வேலை செய்து கொண்டு போவதனால் வந்துவிடக்கூடிய நஷ்டம் என்ன?"

—: ஒருவர் :—

"தீவிரமாக கடவுள் இல்லையென்று மறுக்கும் நாஸ்திகன் கூட, வாழ்க்கையிலே ஒருவித ஒழுக்க வரம்பு வேண்டும் என்பதை ஒப்புக் கொள்கிறான்; அந்த ஒழுக்க வரம்பின்படி நடந்தால் நன்மை ஏற்படுகிறதென்றும், நடக்காவிட்டால் தீமை ஏற்படுகிறதென்றும் எண்ணுகிறான். (மேற்கண்ட கோணங்கள் விளங்கும் முறை போன்று)

—: காந்திஜீ :—

"இதயத்திலே அன்பு நிறைந்து யார் பகைவனைக் கண்டு இதயம் உருகுவாரோ துவேஷமெல்லாம் துறந்து விட்டார் என்றால் அவரே மனிதனில் மனிதன்"

—: காந்திஜீ :—

"தன்னைப் பணிந்துள்ள ஜீவன்களை உயர்ந்த ஆசாரமெனக் கருதி அன்போடு அவற்றை அடிமை அணிந்துக் கொள்வானேயானால், ஒருவன் அவற்றை அடிமைப்படுத்துவதில் பரிபூரண வெற்றியடைந்து விடுகிறான்.

—: காந்திஜீ :—

"உயர்ந்தனவற்றையும் இனியவையும் அளிக்கின்ற அநேக வாசகங்களை உண்மைதான் அழகாகக் கொள்வது மட்டும் சன்மார்க்க நெறியன்று. அவற்றைச் செயலிலும் கடைப்பிடிப்பதே சன்மார்க்க நெறியாகும். உண்மை எண்ணி, உண்மை பேசி, உண்மையாக நடப்பதே சன்மார்க்க நெறியாகும் — "~~காந்திஜீ~~"

[illegible] :

—: காந்திஜீ :

"புராதனப் பண்பாடானாலும் சரி, அன்னிய நவீனப் பண்பாடானாலும் சரி அறிவிற்கும் அனுபவத்திற்கும் அது பொருந்தி வருகிறதா என்று ஆராய்ந்து பார்க்க வேண்டும்"

"மனித சமுதாயத்திற்கு வழிகாட்டிய மகான்களுக்கெல்லாம் ஸ்தானங்கள் பிறர் வழங்குவதால் ஏற்படுவதல்ல; அவர்கள் செய்துள்ள தொண்டைப் பொருத்தும், உரிமையைப் பொருத்தும் அந்த ஸ்தானங்கள் தாமாக அவர்களுக்குக் கிடைத்து விடுகின்றன".

"மனித சமுதாயத்திற்கு உபதேசம் செய்த பெரியவர்களுக்கும் நமக்கும் இடையில் உள்ள தொடர்பு கணவன் மனைவி தொடர்பைப் போன்றது. எனது இதயத்திலே எந்த மகானுக்கு எத்தகைய ஸ்தானத்தைக் கொடுக்க வேண்டும் என்பதைத் தர்க்கரீதியாக வாதாடிக் கொள்வது வேறு; யான் அடைய விரும்புவது அனுபவபூர்வமான உணர்ச்சிபூர்வமான செயல் வேறொன்றுமில்லை."

"வாழ்க்கையில் பொம்மைகள் ஆவதற்காகப் பெற்றோர்கள் உங்களைப் பள்ளிக்கூடங்களுக்கு அனுப்பவில்லை. கடமையுணர்ந்த பிரஜைகளாக வாழவேண்டும்.

"எவன் தன்னை அதிகப்படுத்தி எண்ணிக் கொள்ளாமலும் தன்னைத் தாழ்த்தாமலும் ஏழைகளையும் தாழ்த்தப்பட்டவர்களையும் பாமரர்களையும் பற்றி அதிகமாகவும் நினைக்கிறானோ, அவனே கடமையுடைய பிரஜை ஆவான்."

: நேருஜீ :

"அறிவாளன் வாதம் (அறிவைக் கொண்டே எதையும் ஆராய்ந்து விட வேண்டுமென்று எண்ணுவது)